# 72

# அந்த மனிதர்

மவுத் ஹார்கனை விளையாட்டுக் கருவி என்று சொல்வதா. அல்லது இசைக்கருவி என்று சொல்லலாமா? எங்களைப் பொறுத்த வரை இரண்டும் தான்.

குப்புசாமி, பழமலை, காதர் எல்லோரும் ஆளுக்கொரு மவுத் ஹார்கன் வாங்கிவிட்டார்கள். எங்கள் தெரு ஒரு முட்டுச் சந்து. மெயின் வீதியில் கிளை பிரிந்து ஒரு வீட்டின் வாயிலில் முட்டிக் கொண்டு நிற்கும். மொத்தத்தில் எங்கள் தெருவில் இருந்த வீடுகள் பதினான்கு. இதில் என் ஜோட்டுப் பையன்கள் ஆறு பேர் இருந்தோம், பெண்கள் நாலுபேர். புஷ்பவதியான துரதிருஷ்டம் காரணமாகப் பள்ளிக்கூடத்தை விட்டு நிறுத்தப்பட்டு அம்மாவுக்கு உதவியாகக் காய்கறி நறுக்கிக் கொடுத்து, வீடு பெருக்கி, ஒழிந்த நேரங்களில் சிந்துபாத்தையும், குரங்கு குசலாவையும், படித்துக் கொண்டு காலங்கழித்தார்கள் அந்த நால்வரும். தெரு பெரும்பாலும் அமைதியாகவே இருக்கும். அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு மவுத் ஹார்கனை ஊதிக் கொண்டு போவார்கள் என் நண்பர்கள். "கொஞ்சிக் கொஞ்சிப் பேசி மதி மயக்கும்' என்ற பாட்டை மிக அழகாக வாசிக்கப் பழகிக் கொண்டான் குப்புசாமி. புஷ்வதியாகி வீட்டில் இருந்த சரோஜா, குப்புசாமி அந்தப் பாட்டை வாசித்துக் கொண்டுத் தன் வீட்டைக் கடக்கையில், எந்தக் கைக்காரியத்தையும் போட்டுவிட்டு வெளியே வந்து எட்டிப் பார்த்தாள்.

உடனே நானும் ஒரு மவுத் ஹார்கனை வாங்க வேண்டும் என்று முடிவெடுத்துக் கொண்டேன்.

அப்பா, அப்போது ஹோட்டல் வைத்து நடத்திக் கொண்டிருந்தார். காலை நான்கு மணிக்குக் கடைக்குப் போய் இரவு பதினோரு மணிக்குமேல், கடையைக் கட்டிக்கொண்டு வீடு திரும்பு

வார். நான் அப்பாவை மிக அரிதாகவே வீட்டில் பார்க்க நேர்ந்தது. அவர் காலையில் கடைக்குச் சென்ற பிறகே நான் கண் விழிக்க முடியும். நான் உறங்கிய பிறகே அவர் திரும்ப முடியும். இடையில் பள்ளிக் கூடம் விட்டு மாலை நேரங்களில் எங்கள் ஹோட்டலுக்குப் பலகாரம் சாப்பிட நான் போவேன். பஜ்ஜி சூடாகப் போட்டி ருப்பார்கள். சாப்பிட்டுக் காபி குடித்து, அம்மாவுக்கு விருப்பமான ரவா தோசை வாங்கிக் கொண்டு வீடு திரும்புவேன். அந்த மாலை நேரங்களில்தான், கல்லாவில் அமர்ந்திருக்கும் அப்பாவை நான் பார்ப்பேன். அன்று மாலை அப்பாவிடம் மவுத் ஹார்கன் விஷய மாகக் கேட்டுவிடுவது என்று முடிவெடுத்தேன். கல்லாவை ஒட்டி நின்றுகொண்டு, விரலால், கண்ணாடி போர்த்த மேஜையின் மேல் கிறுக்கிக் கொண்டு நிற்கிற என்னைப் பார்த்தார் அப்பா!

"என்னப்பா, என்ன வேணும்?" என்றார் அப்பா.

நான் தயங்கினேன். அப்பாவிடம்கூட எதுவொன்றும் கேட்ப தற்கு எனக்குக் கூச்சமாக இருந்து. கேட்டுப் பெறுவது எனக்கு என்றுமே சங்கடமான காரியம். கேளாமல் மனிதர்க்கு மனிதர் அருளலே நாகரிகம் அல்லவா?

"மவுத் ஹார்கன் வேணும்பா...?"

"அப்படின்னா?"

"ஒரு ஜான் நீளம் இருக்கும். பக்கத்துக்கு பதினாறு பல் மாதிரி சந்துகள். ரெண்டு திசையிலும் மொத்தம் முப்பத்திரண்டு இருக்கும்! வாயில் வைத்து ஊத வேண்டும். பாட்டெல்லாம் அதில் வாசிக்க லாம்பா!"

பக்கத்திலே இருந்த சர்வர் ராமகிருஷ்ணன் அப்பாவிடம் சொன்னான்.

"பொம்பிளிமாஸ் பழச்சுளை மாதிரி இருக்கும் அண்ணே! பையன்கள் வாயில் வைத்துக் கொண்டு ஊதிக் கொண்டு திரிவார்களே, நீங்கள் பார்த்ததில்லையா?"

"நாளைக்கு வாங்கித் தர்றேன்" என்றார் அப்பா!

குப்புசாமியிடம் இரவல் வாங்கி நான் மவுத் ஹார்கன் வாசித்தேன்.

என் மனசுக்குள் "கொஞ்சிக் கொஞ்சிப் பேசி" வாசித்துவிட வேண்டும் என்பதே நோக்கம். ஆனால் வந்ததென்னவோ வேறு வேறு ஒலிக்குறிப்புகள்.

“இப்பப் பாரு” என்றபடி ஒலி எழுப்பினேன்.

“அச்சம் என்பது மடமையடா, மாதிரி இருக்குடா!” என்றான் குப்புசாமி. எனக்கு ஆச்சரியமா இருந்தது.

“என் வீட்டு வரைக்கும் வாயேன். வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு வாசிக்கலாம்.”

குப்புசாமி என்னுடன் வந்தான். என் நோக்கம் திண்ணையில் அமர்ந்து வாசிப்பது அல்ல! சரோஜா வீட்டை, வாசித்துக் கொண்டே கடப்பது மட்டுமே என் நோக்கம். ‘கொஞ்சிக் கொஞ்சிப் பேசி’ மட்டும் தானா பெண்களைக் கவர முடியும்? ‘அச்சம் என்பது மடமையடா’ கூடத்தான் கவரும். சரோஜா வீட்டைக் கடக்கும் போது சாத்யமான அளவுக்கு உரத்து ‘அச்சம் என்பது மடமையடா’ வாசித்தேன். வாசிப்பதாக நினைத்தேன்.

சரோஜா எட்டிப் பார்க்கவில்லை.

அவள் வீட்டைக் கடந்ததும் குப்புசாமி கேட்டான்.

‘நீ இன்னா பாட்டுடா வாசித்தே?”

“அன்பே அமுதே அருங்கனியே...” என்றேன் பெருமையுடன்.

“ஓகோ! இனிமே என்ன பாட்டுன்னு சொல்லிட்டு வாசி” என்றான் குப்புசாமி!

அடுத்த நாள் மாலை எப்போது பள்ளிக்கூடம் விடும் என்று இருந்தது எனக்கு. பாடத்தை எவன் கவனித்தான்? விட்டதும் நேராக ஓட்டலுக்கு ஓடினேன். கல்லாவை நெருங்கி நின்றேன்.

அப்பா சொன்னார்.

“என்னப்பா?”

“மவுத்ஹார்கன்.”

“ஐயோ. மறந்துட்டேன், கட்டாயம் நாளைக்கு.”

நாளைக்கு நாளைக்கு என்ற அப்பா சொல்லிக் கொண்டே இருந்தார்.

மவுத்ஹார்கன் வந்த பாட்டைக் காணோம்.

அப்பாவுக்கு மவுத் ஹார்கன் வாங்கிக் கொடுக்கக் கூடாது என்பதில்லை. அவருக்கு நேரம் இல்லை. ஓட்டலை விட்டு அவரால் எங்கும் நகர முடியவில்லை. யாரையாவது விட்டு வாங்கி வரச் சொல்லியிருக்கலாம். அப்பா, நான்கு ஆள் வேலையைச் செய்து கொண்டிருந்ததால் ஓட்டலுக்குள் நுழைந்தவுடனே உலகத்தை அவர்

மறந்து போய்விடுகிறார். இடையில் ஞாயிற்றுக்கிழமையும், ஒரு குடியரசு தினமும் வந்து போயின. அன்று கடைகள் இருக்காதே! குப்புசாமி வேறு என்னைப் பார்த்து, "இன்னாடா, மவுத் ஹார்கன் வாங்கப் போறேன்னு சொல்றியே, ரீல்தானா?" என்று கேட்டது மட்டுமல்ல' சரோஜா இப்போது குப்புசாமியைப் பார்த்துச் சிரிக்கத் தொடங்கியிருந்ததும் என் எரிச்சலை மேலும் கிளப்பியிருந்தது.

"கட்டாயமா இன்றைக்கு வாங்கிக் கொடுத்து விடுகிறேன். என்று அப்பா சொல்லியிருந்த அன்றைக்கு வழக்கம்போல் நான் கல்லா அருகில் போய் நின்றேன்.

"என்னப்பா?"

"மவுத்ஹார்கன்."

குற்ற உணர்ச்சியால் அப்பாவின் முகம் வாடிப் போயிற்று. "நாளைக்கு வாங்கிக் கொடுத்துடறேன். ஓட்டலை மூடிட்டே போய் வாங்கி வர்றேன்" என்றார்.

எனக்கு அப்போது அந்த மிருக உணர்ச்சி எப்படி ஏற்பட்டது என்று விளங்கத்தான் இல்லை, இன்னும்.

ஓங்கி அப்பாவின் கன்னத்தில் அறைந்தேன்.

சர்வர், டீ மாஸ்டர், சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் எல்லோரும் திகைத்துத்தான் போய் விட்டார்கள்.

அப்பா கன்னத்தை தடவிப் பார்த்துக் கொண்டே என்னைப் பார்த்துச் சிரித்தார். அவர் கண்களில் கண்ணீர் பொங்கி வழிந்து கொண்டிருந்தது.

**நா**ன் எப்படி வீடு போய்ச் சேர்ந்தேன் என்று எனக்கு விளங்கவில்லை. வீட்டில் இருந்தேன். அம்மா "பொட்டலம் வாங்கி வரலையாடா?" என்றாள். "ஓட்டலுக்குப் போகலை" என்றேன்.

"ஏன் முகம் ஒரு மாதிரி இருக்கு."

"........"

"இரு. காபி போட்டுத் தர்றேன்."

படிக்கத் தோன்றவில்லை. முகம் கழுவத் தோன்றவில்லை. டாய்லெட்டுக்குக்கூடப் போய்வரத் தோன்றவில்லை. கல்லான மாதிரி அமர்ந்திருந்தேன். இரவு சாப்பிடவில்லை.

"என்ன உடம்பு, சரியில்லையா? சொல்லித் தொலையேன், சனியனே'' என்றாள் அம்மா.

சாப்பிடாமல் படுத்துக் கொண்டேன். தூக்கம் வரவில்லை. கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தேன். ஓசைகள் மட்டும் என் அம்மாவின் நடமாட்டத்தை எனக்கு விளக்கிக் கொண்டிருந்தன.

அம்மா சமையல் உள்ளே ஒலிப்பது, தட்டுகளால் பாத்திரங் களை மூடி வைப்பது, அப்பாவுக்குச் சாப்பாடு எடுத்து வைப்பது, பாத்ரூமுக்குப் போவது, முகம் கழுவுவது படுக்கை விரிப்பை உதறுவது, படுப்பது எல்லாவற்றையும் 'காதால்' பார்த்துக் கொண்டிருந்தேன்.

அப்பா வரும் சத்தம் கேட்டது. சைக்கிளைத் தூக்கி ஸ்டாண்ட் போட்டு நிறுத்துவது தெரிந்தது. உள்ளே வருவது, செருப்பை விடுவது, சட்டையைக் கழற்றுவது எல்லாவற்றையும் கேட்டேன்.

"தம்பி சாப்பிட்டானா?" என்று அப்பா கேட்டது.

"இல்லை, சாயங்காலத்திலிருந்தே அவன் என்னமோ மாதிரி இருக்கான். உடம்பு நல்லா இல்லை போல. நாளைக்குத்தான் டாக்டர் வீட்டுக்கு அழைச்சுக்கிட்டுப் போகணும்.

"தேவையில்லை. அதெல்லாம் சரியாகிப் போய்விடும்."

"சாயங்காலம் ஓட்டலுக்குக் கூட வரல்லை போலிருக்கே..."

"அப்படியா? நான் கவனிக்கலை" என்று அப்பா சொன்னார்.

"விளையாட்டுப் பையன். எங்காவது பிள்ளைகளோட விளையாடப் போயிருப்பான். தினம் தவறாமே அவனுக்கு முட்டையும், பாலும் கொடு, உடம்பு அவனுக்கு ரொம்ப 'வீக்கா' இருக்கு. வயசுக்கேத்த பலம் இல்லை."

அம்மா ஆச்சர்யப்பட்டிருக்க வேண்டும். அவள் கேட்பது கேட்டது.

"திடீர்னு அவன் வீக்கா இருக்கிறதை எப்படிக் கவனிச்சீங்க?"

"குழந்தைகளைப் பாத்தா தெரியாதா? ராத்திரி படுக்கப் போறதுக்கு முன்னால, முட்டையும் பாலும் மறக்காமே கொடு" என்றார் அப்பா மீண்டும்.

அப்பா சாப்பிட அமர்ந்தது தெரிந்தது.

நான் அன்று இரவு முழுதும் அழுதுகொண்டே இருந்தேன்.

1987